உ

கணபதி துணை

திருநெல்வேலி

# மும்மணிக்கோவை

இஃது
திருநெல்வேலி
வாசிக்கமீண்ட விநாயகர் கோவிற்றெருவிலிருக்
குங்கால்வாய்மணியம்
இராமசுவாமியாபிள்ளையவர்கள் குமாரர்

**சுப்பிரமணியபிள்ளையவர்கள்**

வேண்டுகோளின்பொருட்டு

மேற்படியூர்
ஆங்கிலோவெர்நாக்குலர் ஸ்கூல்த்தமிழ்ப்
போதகாசிரியராகிய
ம-ா-ா-ஸ்ரீ

**சி. பெற்றநாயகம்பிள்ளை**
**யவர்களாற்**

பார்வையிடப்பட்டு

மேற்படியூர்
ம-ா-ா- கு. சிவராமமுதலியார்
அன்கோ அவர்களது
திருநெல்வேலி முத்தமிழாகர அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது
பிரபவ௵ புரட்டாசி௴

திருநெல்வேலி அருணாசலம்பிள்ளையவர்கள்

குமாரர் - அப்பாவுப்பிள்ளையென்ற

## மனைகாவலப்பெருமாள்பிள்ளையவர்கள்

இயற்றியது

### ஆசிரியவிருத்தம்

பொற்புறுஞ்செந்தில்வாழ்கந்தவேள்பாதமலர்போற்றுவோனிராமசாமிப்
பூமன்றனக்குவரபாலனுயர்நெல்லைவாழ்புனிதனுஞ்சுப்ரமண்யன் 0
அற்புதஞ்சேர்மறைகடேடியுங்காணாதவநவரததானர்மீதி [தனில்
லன்புடன்முனொருதொண்டனருள்செய்தமும்மணிக்கோவையினையகிலம
விற்பனர்துதிக்குநற்காந்திமதியம்மைசீறடியிணைவிரும்புசுகுணன் 0
வேந்தர்கண்மெச்சுநம்பெற்றநாயகமிகுவிவேகனாற்பார்வையிட்டுச் 0
சொற்பெருகுகவிவாணரகமலர்ந்திடமிக்கசோதிசேரச்சிலிட்டுத் 0
நூலங்குநற்கற்பாந்தகாலம்வரையன்பினொடுசூடினன்புகழைமாதோ 0

---

இப்புத்தகம்வேண்டியவர்கள்வாசிக்கமீண்டவிநாயகர்கோவிற் றெருவிலிருக்கும் சுப்பிரமணியபிள்ளையவர்களிடத் திலவிலைக்குப் பெற்றுக்கொள்ளலாம்.



உ

தேவிசகாயம்

திருநெல்வேலி

# மும்மணிக்கோவை

காப்பு

நேரிசை வெண்பா

தாயின் றெடுத்தறியாச் சங்கரனை நெல்லைநகர் *
வேயின்ற முத்தை விளைவறியேன்——வாயின்ற— *
வாக்கெனவே மும்மணிக்கோ வைத்தமிழி னூற்றுதிப்ப *
தாக்குவர்நம் பொல்லா தவர் ............................. *



நேரிசையாசிரியப்பா

மாமேவு மணிநிற வண்ணனுங் கலைமக *
ளாமே வியதிசை நான்முகத் தவனுந் *
தகதொழி லியற்றுந் தனியரு ளுருவாய் *
நித்திய மாகி நிலைபெறு சுயம்பாய் *
மேம்படு பிரம விருத்த புரத்தினிற் *
கண்மணி யெனவரு புண்ணியப் பொருளே *
நலந்தீங் கறியும் புலஞ்சிறி தின்றிப் *
பெற்றசிற் றறிவே பேரறி வாக்கொண் *

டெம்போ லொருவரு மில்லென மதித்துப் *
பாவமும் பழியுந் தாவரு நிரயமும் *
வருவழிப் பயனிற் பெருவிருப் பாகி *
யீட்டிய வாழ்க்கையி னெவர்க்குமேம் பாடு *
காட்டுநல் லறிஞரைக் காண்பதிற் குருடா *
யனையர்த மொழுக்கின் மனமரு வருகநம் *
புல்லனைப் புகழ்ந்தவர் புலன்வழி யொழுகி *
யில்லறம் புரத்தலி னிறப்பது நன்றே *
யினையபுன் னெறியிற் றுனைதரு வேற்கு *
மேவரு நல்லருள் விளைத்தன்
மாவெளிச் சரசியல் வழங்கிய நெறித்தே (க)

நேரிசைவெண்பா

தேமேவுஞ் செல்வத் திறம்புவியி லேமேவு *
நாமேவுஞ் செஞ்சொ னலமேவுந் - தாமேவு *
மந்தநிலை யந்தநிலை யாமேவும் வேணுவனத் *
தெந்தையுனை நம்புநின்று ரோல் (உ)

கட்டளைக்கலித்துறை

ஏலுஞ் செயலொன்று மில்லாத மைந்தர்க்கு மீன்றவர்தாம் *
பாலு மனமு மருத்திடு வாரொரு பாலகரோற் *
சாலு முயிர்பல வீன்றுநெல் வேலியிற் சங்கரநின் *
போலு மொருவருண் டோவுயிர் மேலன்பு பூண்டவரோ (ங)

பூண்டவென் னகத்து மாண்டன விலவே *
கற்றோ ரிகழக் கண்டன வன்றி *
யுண்டென வென்குறை யுணர்ந்தது மிலனே *
யாயினு மறிந்தவை யறைகுவன் கேண்மதி *

பொய்யினைப் புகழ்ந்து மெய்யினை யிகழ்ந்தும்
பேறிழ வாகிய வாறுநம் மகவுக்
கமைத்தவற் றெல்லை யடுத்துள தென்னப்
பெற்றோர் கலுழ மற்றதற் கிரங்கிக்
காண்டிடு மிசசியிற் கடிவது கருதும்
யாக்கை நிலைபெ றுக்குவ கருதித்
தோற்றமு நிலையு மாற்றமு மாற்று
நின்னரு ளெனமறை பன்னிய துணர்ந்தாங்
கிருமூது குரவர் வெருவொளித் திடுகென
நின்னடி பரவு மந்நிலை கண்டுந்
தண்ணளி பிரியாப் புண்ணிய மறைச்சிறு
பிள்ளையி னுயிரைக் கொள்ளுறுத லொழிந்த
கூற்றமு மஞ்சி யாற்றுதற் கிசையாக்
கொலைத்தொழில் பலபல தலைத்தலை புரிந்து
மறநிலை காட்டிப் பிறர்பொருள் கவர்ந்து
முற்றுழி யுதவிய பெற்றியை மறந்து
நற்றவ னென்னுஞ் சொற்பெற நடித்து
மீட்டிய தளர்ந்து காட்டுவ தன்றே
நற்றவாக் கமைந்த கற்பகக் கனியே
நாடுநர்க் கமையாத் தேடரும் பொருளே
தண்டாப் பெருமகிழ் தழைத்துளங் கனியக்
கண்டோர் பிரியாக் கருணையங் கடலே
நாவினுங் கண்ணினு நசையுற மனிதருந்
தேவரு மருந்த மேவரு மருந்தே
மெல்லியன் வேண்டி வேண்டிய தரூஉம்

பல்வளஞ் சிறந்த நெல்லை நாயக *
வினையா னேனு மெவ்வுயிர்ப் பிணிக்கு *
மந்திர மருந்து மணியென வுரைத்த *
திருவெழுத் தைந்துந் தெய்வ நீறுங் *
கண்டியுந் தொண்டரிற் கொண்டதொன் றுண்டா *
லதுபுனை யென்பதொன் றன்றிக் *
கதுவிய வினைக்கடல் கடக்கவே றின்றே (௪)

இன்றே மொழியா விளமுலையா லென்னுயிரைக் *
கொன்றேகுங் கூற்றுதைத்தல் கூடாதோ - வன்றெடுத்த *
பாத மெடுத்த படிநின்ற தேதுயிர்க்கு *
நாததிரு நெல்லைநா தா (௫)

நாதம் பொருளென் றுரைப்பார் சிலர்சிலர் நாதமன்று *
வேதம் பொருளென் றுரைப்பார் பலவும் விளம்புவர்தம் *
போதம் பொருளென்று கொண்டுநெல் வேலிப் புனிதமெய்யே *
வாதம் பொருளன் றெனவுரைத் தாயொரு வார்த்தைகொண்டே (௬)

கொண்டல்கண் படுக்கு மண்டபத் தெழுதிய *
வளைப்புறு கிள்ளை வாளா மருவலுங் *
கையது மடவார் கழிந்தமென் மொழிக்கெதி *
ரோதலு மீதெனக் கோதற நாடிற் *
கல்லா ரேனுங் கற்றோர் முன்பு *
சொல்லார் மிகவு நல்லா ரொன்ற *
தெய்வத் தொடைப்பய னெய்தினபோலு *
நெல்லைப் பதிவாழ் செல்வப் பெரும *
வரும்பெறற் செல்வப் பெருங்குடி வாழ்க்கை *

மன்னிய பேற்று மசப்பே றிலராய்க்
கடவுட் டுறைநீ ரடைவிற் படிந்துந் *
தெய்வத் தொழுகுலத் தையர்க் குதவியு *
மந்திர முன்பில் வணங்குபு கிடந்தும் *
பெற்றநன்மகவையற்புறத் தழுவிக் *
கண்ணினுண் மணியெனக் காத்துளங்களிந்து *
பூண்பன வுண்பன காண்பனமுதலிய *
தாமே விரும்பித் தந்தினி தெடுத்தெனப் *
பெறுமுறை யிருமையுங் குறைவறக்கொடுத்து *
நம்பினர்ப் புரக்கு மும்பர் நாயக *
யானே யாறு நண்ணின னன்றிக் *
கோனே நின்னைக் குறித்தது மிலனே *
செய்பவர் செய்திப் பயன்விளை செய்யிற் *
செய்குவை யென்ன மெய்ந்நூல் பகரவு *
நம்புறு மடியரி னயந்தெனை *
யெம்பெரு மான்கொண் டியற்றுவ தெவனே (எ)

எவனென்று நெல்லைக் கிறைவ யிரந்துய்வே *
னவனென்று பைங்கூ ழறிந்து புவனத் *
தலவன் றனையிரந்தோ வாக்கிவிளை விப்பான் *
வலவனவன் றுனேசெய் வான் (அ)

வானே முதலிரு நாலவகை யாக வரும்வடிவு *
தானே யுனைத்தருந் தன்மையி னல்வலஞ் சார்ந்தனளெங் *
கோனேயென் றுன்னைக் குறிப்பதெவ் வாறு குவலயத்தெம் *
மானேயென் றுன்னை வழுத்தல்பொய் யோசொல் வளைமுத்தனே(

முத்தணி முறுவல் முகிண்முலை யொருபால் *
வைத்தனை யாவில் வாழ்க்கையை யென்கோ *
சடையொடு தோலுடை தாங்கினை யான்முற் *
றடர்கடுந் துயர்ந்த துறவினை யென்கோ *
வுய்த்திடு மொருநெறி யுறுகிலை யதனாற் *
பித்தனென் றியம்பும் பெற்றியையென்கோ *
வினையை யாதலி னியம்பிய வருணூ *
லுளாயள வைக்கோ ருறுதியொன் றிலவெனி *
லுலகிய வினைவைத் துரைத்தனை நன்றிற *
மலகில வருணூ லறைவது நன்றனே *
பொய்யிலங் நெறிபடர்ந் துய்கியென் றனையேற் *
புனிதநிற் பிரிந்து போந்தடியேற்குத் *
தனிவழிப் படூஉந் தன்மையு முளதாங் *
கவுணியர் பெருமான் கைத்தலத் தால்வினை *
குனித்திடு முடலுயிர்க் குற்ற நீங்கிச் *
செந்நிலை நின்ற சீர்நெடு மாறன் *
மெய்ப்பணி கொண்டநெல் வேலியிற் செல்வ *
பற்றி யவ்வழிப் படுத்து *
நித்தநின் னிலையி னிறுத்தனின் கடனே (௰)

கடவா ரணத்துரிதான் கண்ணுதனீ போர்த்த *
திடமாகு மெல்லியற்கே லாது - படநாகம் *
பூண்டதவ ளிந்துமுக பூரணங்கா ணுதெற்கும் *
வேண்டவளர்ந் தாய்க்கடுக்கு மென்று (௰௧)

என்று மதியன லாகுநின் கண்ணெதி ரெய்தியுநேர்
சென்றறி யாரிற் றிகைப்பவ ரோவித் திகிரிவனத்
தொன்றினை நம்பொருட் டாலென் றறிவ ருனதருள்பெற்
றன்றறி வார்செறி வார்பிறி யாதகற் றுவெனவே (௰௨)

ஆவுறு பயனுவந் தாடுதல் வேட்டுப்
புதல்வர்வாய் மழலை யிதம்வருத் துவபோற்
கற்றோர்க் கின்பந் தெற்றன் விளைக்கும்
வளையிற் கோக்குலம் விளித்துந் துரந்துங்
கானிடைப் பசும்புற் கறித்திடுவித்து
நன்னீ ரருத்தியு மன்னிழற் புகுத்தியு
மின்புறப் புரத்தலி னன்புறப் பயந்த
புனிற்றிளங் கன்றுணப் பொழிந்துமீப் பொழிபா
லிறைவனுக் குதவ விரும்பெருங் குடநிறைத்
ததரிடைப் படரு மாயன தடிகள்
காம்பினைத் தடிந்த தூம்புடைக் குற்றியுண்
மன்னினை வைகி வருந்தொறும் பலகா
லெற்றிடக் கவிழ்பா லேற்றுட னுடல்
கண்டவ னெறியப் புண்படு திருமுடி
காட்டுபு நின்ற கழைவனத் தமுதே
சிற்றெழுதிரப்பன் சொற்றிடக்கேண்மதி
மனநினை நினைக வாக்குனை வழுத்துக
மெய்நின் முனைத்தொழு தாக்கைமேம் படுக
நோயுநல் குரவு மேயாதொழிக
பிறப்புழித் துன்பமற் றிறந்து
பிறப்பில ளுகநின் பெரும்பத மடைந்தே (௰௩)

அடைந்தாருக் கில்லைவினை யல்லாதார்க் குண்டென் *
றுடைந்தாரறியா துடைந்தார் - மிடைந்தசவை *
நெல்லைநகர்வாழ்வே நினக்கடிமை யல்லாதா *
ரில்லையென வஞ்சே னியான் (யச)

யானென தென்றிருந் தேன்சில நாளுனை யானுமெனைத் *
தானுன தென்றறிந் தேன்பின்பு நீவைத்த தன்மையிது *
வானதென் றுலெனக் கேதுண்டு நெல்லைக் கதிபவிது *
போனது வந்தது நம்மாலென் றெண்ணுதல் புல்லறிவே (யரு)

அறிவுக் கறிவா யாருயிர்க் குயிராய்ப் *
பிறிவற நின்றுநின் பின்வழிப் படுமுயிர்க் *
கிச்சை முதலிய வியற்றிடு வதனிற் *
பிச்சநின் றனக்கோர் பெறும்பய னென்னே *
யிங்ஙனம் வருந்தொழி லியற்றிடு பவர்தா *
மங்கண நின்போ லெங்கணு மிலரோ *
புத்தி முத் திகளைப் பொருத்துதற் கமைந்த *
வருளெனிற் பசியா லழிந்தவர்க் கிரங்கிப் *
பொருடரு பவரி னொருவனு குதியா *
லறுவகைக் குணநிற் கமைந்தன வில்லோ *
முற்பவத் தியற்று நற்பெருந் தவத்தால் *
வித்தக நிறைந்த சித்தர்த முளத்தினும் *
வளாவனத் துவந்து மருவிய தடவு *
ணின்னியல் பிதுவென நிகழ்த்தி *
யன்னிய மருவா தமைதியென் னகத்தே (யசு)

ஆகமே நமைமருவ லான்பரத்தை மேவல் *
சகமே யெனமருவுந் தோன்றன் - மகமேவி

நெல்லைவாழ் கின்ற நிமலா பழிக்கஞ்சி *
யல்லையோ வென்றுரைசெய் வாய் (௰௭)

ஆயும் பருவ மடுக்கு முன்னே யிவ் வணங்கனையா *
ளேயு முதுக்குறை வென்னை மறைத்திடு மீன்றெடுத்த *
தாயுந் தமரும் வெறுக்கு மிதுசெய்த சங்கரனை *
வேயுங் குடிகொண்ட வேந்தனை நோக்கின் வியந்திடுமே (௰௮)

வியந்திட வானம் பயந்திட லாண்டோ *
ரீரா றகத்து மின்றியெவ் வுயிரும் *
பசிநோய் வருத்தத் தசைபுலர்ந் தொடுங்குங் *
காலம்வந் திடவதிற் கலங்குத லின்றி *
யருணூன் முறைபிற ழாதுநிற் பரவும் *
பூசனைத் தொழும்பி னேசமிக் கோங்கு *
மொருசிவ மறையோ னுழந்தரி திற்பெறுஞ் *
சாலியை யுணக்கிச் சருவமைத் திடுவா *
னென்றாழ் விரிதிரு முன்றிலிற் பரப்பித் *
தென்றிசைக் கங்கை யென்றுல கேத்தும் *
பொருநையிற் சிந்து பூந்துறை படிந்து *
மஞ்சனங் கொடுவர வழிச்செலு மமையத் *
துந்தமின் மூல மமைதரு முத்தெனு *
மிருதிரு வுருவின் மருவிய கடவு *
ளெந்தைநின் பூசைக் கியைந்தபல் வளனுந் *
தருமழை பொழியத் திருவருள் புரிதியென் *
றெரியிடு மெழுகி னிரங்கினன் வணங்கிச் *
சென்றோன் வருமுன் னின்றவன் பொழியச் *

சாலிநீர் கவர்ந்து சருத்தவிர்க் திடுமென *
வேதியன் மனத்து விளைதுயர் களையச் *
சாலிசூழ் தரவருள் வேலி கோலி *
யருச்சனை யுவந்த திருத்தகு செல்வ *
வித்திற முணர்ந்து மிதுவல வறிஞர் *
பத்தி வலையிற் படுதியென் றுரைத்த *
மெய்த்திற முணர்ந்தும் பத்தியொன் றில்லே *
னுனையுற நினைதல்கொம் புயர்த்த *
நனைபெற முடவன் மனநினைந் தற்றே (௰௯)

அற்றாலு நல்குரவி லாழ்ந்தாலுந் தீயநோ *
யுற்றாலும் வேறொன் றுறுத்தாலு - மெற்றாலும் *
வாடுவா ரல்லர் வளைவனத்தெம் மானருளைக் *
கூடுவார்க் குண்டோ குறை (உ௰)

குறையாத செல்வத்த ராயினு நல்ல குணமறிவு *
நிறையா தரவொன்று மில்லாத மாந்தரை நீசரின்வைத் *
தறையா ரவரொடு மன்பர்க ளாற்றிய தாற்றியநற் *
பொறையாள னெல்லைப் புனிதனுக் காட்டபட்ட புண்ணியரோ (உக)

புண்ணியந் திரண்டு நண்ணிய தென்னத் *
திருவுரு வெடுத்த செம்மையர் வாய்மை *
நல்லொழுக் கிறவா நலத்தினர் யார்க்கும் *
பின்னின் றுரைக்கு நன்னயக் கிளவிய *
ரைம்புல னடர்த்த வறிவின ரமைந்த *
செம்புலம் வியவா வும்பரி னுயரியர் *
மாலயன் முதலா மேலையர் பதத்தைக் *

கதியென மதியா மதியினர்க்கினையி *
னின்றொழிந் தொன்று நிலவிய திலதென *
வன்னிய மறியா ரகத்திரு டிறந்து *
சுடரிய வொருவவத் தொல்லையவாய *
வுணாயுணர் விறந்த வுயர்நிலைக் குரியா *
ரல்லனாப் பணிப்ப வருளுரு வெடுத்துப் *
படரிய வனைதரு கடவுண்மா மணியாய் *
நின்றுநீ யருளவு நினையே *
✠னென்றுசே ✠ரூம னென்பது திடனே (௨௨)

திடனுக நெல்லைத் திருநகர்வந் தாளும் *
படநாகம் பூண்ட பரமா - கடனுக *
மன்ன பொறியடரி னங்தோ வெனக்காவா *
யென்னையெனை யாள்வதுநீ யின்று (௨௩)

இன்றே கயந்திடுங் காமினித் தித்தித் திடுங்கனியா *
யன்றே யமைந்திடு மாணவ மாகி யகன்றுயிர்க *
ளொன்றே புரிவது மவ்வாறு வேய்வனத் துன்னைவெளி *
மன்றே தருதி விரைந்தெனக் கூற வழக்கிலையே (௨௪)

இல்லையுண் டெனத்தகு மெல்லிய மருங்கு *
றேம்பிடப் பணைத்துத் திமிர்த்திறு மாந்து *
குன்றெனத் தலையெடுத் தொன்றொடொன் றுறுத்துப் *
பச்சிள நீரைப் பயப்படத் துரந்து *
கச்சறுத் தெழுந்து கனன்றுகண் கறுத்துச் *

---

✠ என்று - சூரியன் ✠ ஊமன் - கூகை

சாந்தொடு புழுகு தோய்ந்துசித் திரித்துக்
கண்டோ ருயிரை யுண்டுமிழ்ந் திடுமிரு
கடக்களி றனைய தடப்பெரு முலையார்
முத்தியி லின்ப மெத்தென நினையா
மகிழ்ந்தனர் வேட்டு மருவினர் விளைக்கு
மாரா வின்ப மருந்தின ரிருந்து
மாலயன் முதலா மேலையர் சூழுமிப்
பாற்கட லகட்டு மேற்பட வரைதிரித்
தெய்த்தனர் வருந்தி யீற்றபடு துயரல
தச்சுறுத் தெழுந்த நச்சினை வெரீஇ
யருந்தின சாவா மருந்தினு மினிய
நல்லுண வாற்ற லில்லரா யின்று
மின்னன பலவு மிம்மையின் வழாஅது
மன்னிய பெற்று வாழ்தரு வாழ்க்கையு
மரிபிர மர்க்கு மறிவரி தாய
மறுமையிற் பயனும் பெறுகிறோர் பாசி
லுயன்று நீ வேய்வனத் தெளிவந் திருந்த
நன்றறிந் திருமையு நண்ணுவர் யாரோ
யமையினுட் டுளையி னடங்கிய மேனி
வழிபடற் கெளிதாய் வளர்ந்திடு கென்னத்தான்
வேண்ட வளர்ந்த மெய்த்திரு வுருவை
யன்றெழு மருணக் குன்றனுந் தென்ன
முண்டகத் தாண்முதல் முழுவதுங்
கண்டயி ராம காவல னுனவே (௨௫)

## திருநெல்வேலி மும்மணிக்கோவை.

வேயின் றெடுத்த விமலா வடியேனைத்
தாயின் றெடுப்ப தினித் தப்பாதோ – வாயின்ற
தாதைவடி வாளுடனீ தானென்றுற்பின்பிறவி
வாதை யெனையடுமோ வந்து

வந்தா யிம்மாயை மயக்காம னெல்லையின் மன்னியரு
டந்தா யுனைமுந்தி யான்விளை யாடத் தனித்திடும்போ
தெந்தா யிம்மாயை யெனும்பேய் மகள்பிடித் தீர்ப்பதுபார்
பிந்தா யெனக்குத் துணையாய் முன்சேறியிப் பேய்விடவே

விடம்படு மணிய விடங்களை விரும்பி
யுத்தர காஞ்சியி னுமையவள் பரவு
மெய்த்திற முதலிய மேவிய தாவிது
தெக்கண காஞ்சி தெரித்திடி னன்றிக்
கவுரிய னாதிக் கடவுளம் பருவத்
தாயிரம் வருட மரசியல் புரிந்து
வேட்டன நாளும் விலக்கா தருளியும்
வாள்விழிச் செடிச்சியர் மயங்குகங் காள
வேடமோ டிரந்து மெய்க்கதி யளித்து
மலைமகள் வதன மதியொடு நிலவிக்
கவினிய பவளக் கடிக்கையிற் பொடித்த
முறுவலை நாணு தறைசிலம் பலம்ப
மாலயன் முதலோர் சால்வுந் துஞ்ச
விழியனற் பொடித்த வெண்பொடி பரம்பும்
புறங்கா டரங்காப் பொற்புட னடித்தும்
வாட்ட மில் பொற்றா மரைத்தடத் தருணீ
ராட்டிமும் மலவழி ரழுக்கினை யறுத்து
மாபா தகந்திர [illegible]
யருணீ ரளித்து மருணீ மொழித்துஞ்
சிந்துபூந் துறையெனுந் தெய்வீகக் கங்கையி
னந்தமில் பவத்துய ரகற்றிட வாட்டியு
மூலகுயி ராக நிலவியவடிவுக்
காதியுமந்தமு மாமிவை யென்ன

[illegible]

மூலமும் வேய்தரு முத்தமு மாகு
மிருதிரு வுருவா யொருவனின் றருளு
மித்தலத் தெனப்படி யின்றியன் பளவி
முத்தர்சொற் றிடுமெய்ம் மொழித்திற முணர்ந்து
பூம்பொடு குடங்கரிற் படிந்துறைந் தென்ன
விருவினைப் பயனொடு மருவுடற் பொறையை
நீங்குவ திவறு மோங்குய ரறிஞருங்
கூடுமன் பினிலுனைக் கும்பிடல் வேட்டு
நெல்லையம் பதியி னெல்லைவிட் டகலா
ரீங்கிவர் தம்மொடு மென்னையு மிருத்தி
யித்தகின் றிருவுரு நிலையை
மத்தனிற் காண வைப்பதெத் தவமே (உ௮)

அவத்தி லனுவேனுஞ் சரியாமலென்று
மவத்தழுந்து வெனையடுத் தாண்டு சிவத்துவத்து
மொன்றாக்கி யென்னை யுறவாவாய்த்தாம்பிரமா
மூன்றுநெல் வேலிவாழ்வாய் (உ௯)

ஆயு மறிவுக் கறிவே யமைவனத் தாயெனக்குத்
தாயுநற் றந்தையு நீயேயுன் பொன்னடித் தாமரைக்கீ
ழேயும் படிதருந் தேசிகன் பாதத்தை யென்சிரமும்
வாயு மனமும் பெறப் பணிப் பாரிது மாதவமே (௩௰)



